[21st April 1960

9–30 a.m. SRI A. GOVINDASAMY : சார், பொது மக்கள் டாக்சியிலிருந்து ஒரு குறிப்பிட்ட இடத்தில் இரங்க நேரிடும் நேரத்தில், அங்கிருக்கும் போலீஸ்காரர்கள் பழிவாங்கும் நோக்கத்தோடு, டாக்சி ட்ரைவர்கள் மீது நடவடிக்கை எடுத்து, சார்ஜ் ஷீட் போடுவது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI V. RAMAIAH : அதைப் போன்ற புகார் என் கவனத்திற்குக் கொண்டுவரப்படவில்லை.

SRI N. K. PALANISAMI : May I know, Sir, whether on the 26th February 1960 near the Wellington Talkies, a particular family was stopped for four hours, because the taxi in which they were travelling was stopped near the Wellington Talkies ? If so, may I know why the Government took such a drastic step ?

THE HON. SRI V. RAMAIAH : The hon. Member may put a separate question.

*Implementation of certain Acts*

* 780 Q—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப் பாரா—

(அ) ஓட்டல், பீடி, தொழிலாளர் சட்டத்தைப் பராமரிக்க அதிகாரிகளையும், சிப்பந்திகளையும் நியமிக்க சேங்ஷன் செய்யப்பட்டதா ?

(ஆ) அப்படியானால் என் இதுவரை நியமிக்கப்படவில்லை ?

(இ) சேங்ஷன் செய்து எவ்வளவு நாள் ஆகிறது ?

THE HON. SRI V. RAMAIAH : (a) Yes, Sir.

(b) Orders have been issued appointing officers to the posts sanctioned.

(c) Nearly four months.

SRI V. K. KOTHANDARAMAN : அந்தக் காரியாலயங்கள் திறந்தாகிவிட்டனவா ? இல்லையென்றால் அப்படித் திறக்கப்படுவதற்கு ஆலோசிக்கப் படுகிறதா ? அப்படியானால் எந்தந்த இடங்களில் அந்தக் காரியாலயங்களைத் திறக்கப்போகிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது லேபர் ஆபீசர்களுக்கு காரியாலயங்கள் இருக்கின்றன. இவர்களுக்கு என்று புதியதாக திறக்கவேண்டிய அவசியம் இல்லை. எந்தந்த இடங்களில் அந்தக் காரியாலயங்கள் திறக்கப்படும் என்பது கூடிய சீக்கிரம் முடிவு செய்யப்படும்.

SRI N. MARUDACHALAM : பீடித் தொழிலாளர்கள் சட்டத்தில் இந்த லைசென்ஸ் விஷயமாக ஆறு மாதங்களாக ஒத்திப்போட்டுக் கொண்டிருக்கிறார்களே, அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : லைசென்சை உடனடியாக வாங்க வேண்டுமென்று சொன்னால் பீடித் தொழிலாளர்கள் சங்கத்திலிருந்து பல மனுக்கள் சர்க்காருக்கு வருகின்றன. பீடித் தொழிலை முதலாளிகளும் மூடி விடுகிறார்கள். ஆகையால் அவர்களுக்கும் கொஞ்சம் அவகாசம் கொடுத்துத்தான் அதை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று யோசனை செய்து முடிவு செய்யப்பட்டது.

MR. SPEAKER : Questions are over.